13th March 1959]

**Sri V. K. KOTHANDARAMAN** : தண்ணீர் வசதி வேண்டும் என்றும், ட்ரெயினேஜ் முதலியவும் டவுன் ஹால் கட்டுவதற்கும் அவர்கள் அங்கேயிருந்து கேட்டிருக்கிறார்கள். அவைகளும் இந்த ஸ்டேட் மென்டில் காணப்படவில்லை. அதே நேரத்தில் ஒரு ரெஸ்ட் ஹவுஸ் கட்டு வதற்கு ரூ. 20,000 சாங்ச்ஷன் செய்யப்படவில்லை. தனியார் துறையிலும், பொது துறையிலும் ஒரு ரெஸ்ட் ஹௌஸ் கட்டுவது அவசியமாக இருக்கிறது. மந்திரிகள் வந்தாலும் அங்கே தங்க இடம் இல்லாமல் பெரிய முதலாளிகள் பங்களாவில் தங்குகிறார்கள்.

**Sri K. VINAYAKAM** : ரெஸ்ட் ஹௌஸ் அங்கே இருக்கிறது.

**Mr. SPEAKER** : I think the Hon. Minister must reply and not the hon. Member Sri Vinayakam.

**Sri V. K. KOTHANDARAMAN** : நீங்கள் சும்மா இருங்கள். ரெஸ்ட் ஹௌஸ் இடிந்துவிட்டது. இப்பொழுது ஒருவரும் தங்குவதில்லை. அதனால் அங்கே ஒரு ரெஸ்ட் ஹௌஸ் கட்டுவதற்கு சாங்க்ஷன செய்யப் படுமா ?

**The Hon. Srimathi LOURDHAMMAL SIMON** : குடியாத்தத்தில் ரெஸ்ட் ஹௌஸ் இருக்கின்றது. நானே அதில் தங்கி இருந்திருக்கிறேன். அங்கே எவைகளுக்குத் தேவை அதிகமாக இருக்கிறதோ அவைகளை உடனடியாகப் பார்த்து செய்வதற்கு முயற்சி எடுத்துக்கொள்ளப்படும்.

*Madras-Trivandrum Express*

* 760 *Q*.—**Sri M. K. SOMASUNDARAM (on behalf of Sri P. Urkavalan)** : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

சென்னையிலிருந்து போகும் திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் ரெயிலில் 3-வது வகுப்பில் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கும் ஸ்லீப்பிங் கோச் (sleeping coach) பெட்டியை மதுரையுடன் கழற்றிவிடாமல் திருவனந்தபுரம் வரை கோர்க்க ஏற்பாடு செய்யும்படி மத்திய சர்க்காருக்கு நம் சர்க்கார் சிபார்சு செய்ய உத்தேசம் உண்டா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : No such recommendation has been made to the Central Government. But the Southern Railway Administration has intimated that this question is under its consideration.

*Government employees declared medically unfit for service*

* 761 *Q*.—**Sri K. R. VISWANATHAN** : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the number of Government employees, district-war, who were certified as unfit for service by the various District Medical Officers in 1957–58 and 1958–59; and

(*b*) the various causes or diseases on account of which they were declared unfit?

**The Hon. Sri M. A. MANICKAVELU** : (*a*) & (*b*) A statement[a] is placed on the table of the House.

---

[a] Printed as Appendix III on pages 281–282 infra.

[13th March 1959

SRI K. R. VISWANATHAN : இப்படிப் பல நோய்களிலிருந்து சர்க்கார் சிப்பந்திகள் எந்த நோயின் காரணமாக அதிகமான எண்ணிக்கையில் வேலையிலிருந்து நீக்கப்பட்டிருக்கிறார்கள் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அந்த நோய்களின் விவரங்கள் அதில் சொல்லப்பட்டிருக்கிறது. ஒரு நோயை முதலில் போட்டிருப்பதால் அதில் அதிகமாக இருக்கிறார்கள் என்ற அர்த்தம் இல்லை. ஏதோ வரிசைக் கிரமமாக போட்டிருக்கிறார்கள், அவ்வளவுதான்

*Government employees declared medically unfit for service.*

* 762 *Q.*—SRI K. R. VISWANATHAN : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the number of appeals to the Medical Board preferred by Government employees, declared unfit by the various District Medical Officers in 1957–58 and 1958–59;

(*b*) the number of cases in which reinstatement was ordered; and

(*c*) the diseases from which the persons reinstated were suffering?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) *to* (*c*) A statement [a] is placed on the table of the House.

SRI K. R. VISWANATHAN : இந்தப் பல நோய்களில் நீரிழிவு நோய் (டயபிடிஸ்) இருப்பதால் வேலை செய்வதற்கு அவ்வளவு பாதகம் இருக்காது என்ற காரணத்தினால் அந்த தடையால் பாதிக்கப்பட்டவர்களை வேலையிலிருந்து நீக்குவதைச் சர்க்கார் தடை செய்யுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அது சாதாரண அளவில் இருந்தால் அதனால் பாதகம் ஒன்றும் ஏற்படாது. ரொம்ப அதிகமாக இருந்தால்தான் " டிஸ் க்வாலிபை " பண்ணுகிறார்கள். குறைவாக இருப்பவர்கள் அநேகம் பேர் வேலை செய்துகொண்டிருக்கிறார்கள்.

*House-sites for Harijans.*

* 763 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

கோயம்புத்தூர் ஜில்லாவிலே ஹரிஜனங்களுக்கு வீட்டு மனைக்கட்டு நிலங்களை ஆர்ஜிதம் செய்து வழங்குவதற்கான திட்டத்தை தீவிரமாக அமுலுக்குக் கொண்டுவருவதற்காக எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் யாவை ?

THE HON. SRI P. KAKKAN : A statement [b] is placed on the table of the House.

SRI P. G. MANICKAM : ஸார், வீட்டு மனைகட்டுகளுக்காக 300 விண்ணப்பங்கள் வந்திருப்பதாகவும், 1958–59-ல் 17 விண்ணப்பங்கள் எடுத்துக்கொண்டிருப்பதாகவும், 6 விண்ணப்பங்கள் நோடிபிகேஷன்படி பரிசீலிக்க அனுப்பப்பட்டிருப்பதாகவும் தெரிகிறது. ஸ்பெஷல் டிபுடி தாசில்தார், மற்ற அதிகாரிகள் ஆகியவர்களை அதிகப்படுத்துவது "கன்ஸிடரேஷனில்" இருப்பதாகக் கொடுத்திருக்கிறார்கள். மேற்கொண்டு ஸ்பெஷல் தாசில்தார், மற்ற அதிகாரிகளை நியமிக்க என்ன ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது ?

---

a Printed as Appendix IV on page 282 infra.

b Printed as Appendix V on page 283 infra.